


# நரபலி!

தீபாவளி மலர்*

ரூ. 1-50

## கருத்துப் போட்டி எண்-23 முடிவு

"மனித பலூன்!" சித்திரக் கதை கருத்துப் போட்டியில் கலந்துகொண்டவர்களில் கோ. சிங்காரவடிவேலன் (ஆண்டி மடம்), ரா. தேவ்ஆனந்த் (பாண்டிச்சேரி-9), எஸ். முகமது யூசுப் (ஆவணம்), கோ. கற்பகம் (பல்லாவரம்), வெ. ராமன் (மானாமதுரை), ச. ரவிச்சந்திரன் (வீரசோழபுரம்), கே. கீதா (ஈரோடு-4), பி. ஹேமாவதி (கோவை-12), எஸ். முருகேசன் (நார்த்தம்பட்டி), எஸ். கோகுலகிருஷ்ணன் (திருக்கோகாணம்) ஆகியோர் பாராட்ட தகுந்த விதத்தில் கருத்துக்களை எழுதி இருந்தார்கள்.

ஆனால் மிகச் சிறந்த கருத்தை எழுதியவர் என்று தேர்ந்து எடுக்கப்பட்டு அதற்காக ரூ. 50 பரிசு பெறுபவர்:—

எஸ். என். பி. அருணாசலம்,
70, பெரியார் வீதி,
ஈரோடு-638 001.

அவரது கருத்து வருமாறு:—

"ராணி காமிக்ஸ்" இதழ் 31-ல் வெளியான "மனித பலூன்" சாகச கதைத் தொகுப்பில், சூப்பர் ஹீரோ டைகரின் "குணாதிசயம்". இதுவரை நாம் கண்ட ஹீரோக்களில் இருந்து முற்றிலும் மாறுபட்டது.

உயிருக்கு ஆபத்தான சந்தர்ப்பங்களில் கூட வாழ்க்கையை, ஒரு வேடிக்கையாக எடுத்துக்கொள்ளும் ஒரு புதுமையான, விந்தையான, ஆனால் விவேகமான, வீரமான ஹீரோவாக டைகரை காண்கிறோம்.

சுரபியாவில், காரில் பயங்கரவாதிகள் பின்தொடரும் போது அவரிடம் இருந்து புறப்படுகிறது, ஒரு "டொட்ட டாங்". (பக்கம் 10) இந்த கட்டமே என்னை கவர்ந்த கட்டமாகும். (பிறகு அது பல இடங்களில் தொடர்கிறது!)

இந்த வார்த்தை ஏதோ வேடிக்கைக்காக போடப்பட்டது அல்ல. இந்த கதை நாயகனின் குணாதிசயம், அந்த வார்த்தையில் கோலோச்சுகிறது. நிற்க,

உயிரையே முதலீடாக வைத்து ஆபத்தில் தொழில் நடத்தும் துப்பறிவாளர்கள், ஆபத்தை ஒரு விளையாட்டாக— வாழ்க்கையை ஒரு வேடிக்கையாக, அதேசமயம் காரியத்திலும் கண்ணாக இருந்து, ஒரு குஷி மனப்பான்மையை வளர்த்து கொள்ள வேண்டும், டென்ஷனை விலக்க வேண்டும் என்ற மனப் பக்குவத்தை அது பரப்புவதால், என்னைக் கவர்ந்தது."

இவ்வாறு அருணாசலம் கூறி உள்ளார்

ராணி காமிக்ஸ்—33
(மாதம் இருமுறை இதழ்)

நவம்பர் 1—14
1985










பழம்பெரும் ஆலமரத்தின் கீழ் அவரது மயில் சிம்மாசனம் அமைந்து இருந்தது.


அந்த சிம்மாசனத்துக்கு பின்னால் ஒரு மர்மச் சுரங்கப் பாதை சென்றது.


அந்த சுரங்கப் பாதை பல பாதாள அறைகளுக்கு வழியாகும்.


ஒவ்வொரு இரவும் மன்னர் பீமா, நகர் சோதனைக்கு மாறுவேடத்தில் செல்வது வழக்கம்.
இன்று ஆடு-மாடு மேய்ப்பவன் வேடம்!


சுயம்பு மலையில் ஏராளமான மலைஜாதியினர் கூட்டம் கூட்டமாக வசித்தனர்.
இன்று இந்த கிராமம் போகிறேன்.


கிராமம் அமைதியாக இருந்தது.
ஒரு வீட்டில் கேட்ட பேச்சு
பீமாவை திடுக்கிட வைத்தது.


இவன் சாவதற்கு சில மணி நேரமே இருக்கு!


குடிசைக்குள் நடக்கும் பேச்சை மன்னன் பீமா மறைந்து நின்று கேட்டார்.
என் ஒரே மகனுக்கு உயிர் கொடுக்கக்கூடிய மருந்தே இல்லையா?
இல்லையே, என்ன செய்வது?


இவன் நாடித் துடிப்பு அடங்கிக்கொண்டு இருக்கு. ராத்திரி தாக்குப்பிடித்தால் அதிசயம்தான்.


குருதேவா! ஏதாவது செய்து காப்பாத்துங்க!


இவன் பாவம் செய்து இருப்பதால் காப்பாற்ற முடியாது.
பீமா வந்தது அவர்களுக்கு தெரியாது.


ஏழைகளை சுரண்டியதால் மன்னர் பீமா இவனை தண்டித்தார்.


இவன் இப்போது ஏதாவது நன்மை செய்தால், இறந்த பிறகாவது இவன் ஆத்மா சாந்தி அடையும்!


இல்லாவிட்டால், இறந்தபின் இவன் ஆவி கொடிய பேயாகி இந்த இடத்தை ஆட்டிவிக்கும்!


அந்த குடிசையை விட்டு நடந்த மன்னர் பீமா, வெகு தூரத்தில் இருந்த இன்னொரு கிராமத்துக்கு போனார்.

திடீர் என்று அவர் திடுக்கிட்டு திரும்பினார்—

என்ன அது?










என்ன?


அந்தப் பெண்ணை உயிரோடு தீக்குளிக்க வைத்து நரபலி கொடுக்கப் போகிறீங்களா?


சிதையை நோக்கி கிராம மக்கள் வந்து கூட ஆரம்பித்தனர்.


சாவு பறைகள் ஒலிக்க, மரண நடனம் தொடங்கியது!


மலைக் கள்ளை குடித்துவிட்டு அவர்கள் தாண்டவம் ஆடினர்.


அதே நேரத்தில் ஒரு குடிசையில்...
இவளை விடுங்க! என் மகளை உயிரோடு எரிக்க யாருக்கும் உரிமை இல்லை!


அந்தப் பெண்ணின் பெற்றோர் கதறி அழுதனர்.
கருணை காட்டுங்க! அவ சின்ன புள்ள!
முடியாது! என் மகளை உயிரோடு எரிக்க சம்மதிக்க மாட்டேன்!


சிதை அருகே...
அதோ அவள்!
மாறுவேடத்தில் இருந்த மன்னர் அவளைப் பார்த்தார்.


இந்த அழகிதான் எரிக்கப்பட வேண்டியவள்!


அதற்கு காரணம் என்ன?


இவளுக்கு வயது 17 கடந்து விட்டது. இருந்தும் திருமணம் செய்ய மறுக்கிறாள்!
அவள் சுதந்திரமாக இருக்க நினைக்-கலாம்!


எங்கள் குலத்தில்
17 வயதுக்குள் பெண்கள்
திருமணம் செய்து கொள்ள-
ணும். இல்லே, எங்க தேவதை
எங்களை அழித்துவிடும்!


அப்படி தேவதை கோபப்படாமல் இருக்க அந்த இளம் அழகியை, அந்த மலைஜாதி-யினர் உயிரோடு எரித்து நரபலி கொடுக்க இருப்பதை பீமா அறிந்தார்.


அழகி திக்குளிப்புக்கு இறுதி சடங்குகள் நடந்தன. கிராம தலைவர் அவளுக்கு சதி என்ற பொட்டை இட்டார்.


சங்கு ஒலி காதைப் பிளந்தது.
சாவுப் பறை ஓங்காரமிட்டது.


இளம் அழகி திக்குளிக்கும் நேரம் வந்ததும் கிராமத் தலைவர் பேசினார்.
அமைதி! அமைதி!
கொஞ்ச நேரத்தில் கூட்டத்தில் மரண அமைதி நிலவியது.


பிந்து!
ஆம், அது—
தான் அவள்
பெயர்.


பெண்ணே!
கடைசியாக
கேட்கிறேன்!
திருமணம் செய்யப்
போகிறாயா?
இல்லையா?
மாட்டேன்!


உன்னைப் போல்
திமிர்பிடித்தவளை நான்
பார்த்தது இல்லை!
சொல்வதை கேள்...


நான்
கேட்க தயார்
இல்லை.


சரி!
கடைசியா ஒரு
கேள்வி!
என்ன
அது?


திருமணத்தை
நீ ஏன்
வெறுக்கிறாய்?
அது என்
சொந்த விஷயம். இந்த
ஜாதி, மத கட்டுப்பாட்டுக்கு
அப்பாற்பட்டது.


ஓகோ! சரி, சாகும் முன் உன் கடைசி ஆசை என்ன?
அதை நிறை--வேற்றுவீரா?
அது நியாயமானதா இருந்தால்...


அழகி பிந்து ஒரு கணம் யோசித்த பின்...
நான் மன்னர் பீமராவை பார்க்கணும்!
பீமாவா? மாட்சிமை தங்கிய மகாராஜாவையா?
ஊர் தலைவர் திகைத்தார்!


மலை மன்னர் பீமாவை சந்திக்க வேண்டும் என்ற பிந்துவின் கடைசி ஆசை அனைவரையும் திடுக்கிட வைத்தது.
அது முடியாது. இந்த மலையின் உச்சியில் வாழும் மகாராஜாவை எப்படி இங்கே அழைத்து வர முடியும்?


அங்கே நடக்கும் நாடகத்தை மன்னர் பீமா கவனித்துக்கொண்டு இருந்தார்.
பிந்து என்னை சந்திக்க விரும்பக் காரணம் என்ன?


பெண்ணே! வேறு ஏதாவது ஆசை இருந்தால் சொல்!


அதுதான் என் கடைசி ஆசை! அதை நிறைவேற்றும்! இல்லை மறந்துவிடும்!
ஆஹா...!


நான் தீ குளிக்க தயார்!


நில்!
அப்போது உரக்க கேட்ட அந்த குரல் எல்லோரையும் ஒரு குலுக்கு குலுக்கியது!


இதோ, நான் உங்களுடன் இருக்கிறேன்!
மலை மன்னர் பீமா, அனைவரும் அதிசயக்கும் வகையில் மாறுவேடம் கலைந்து, தோன்றினார்.


அனைவரும், ஆச்சரியமும் அதிர்ச்சியும் அடைந்தனர்.
நினைத்தால் தோன்றும் பரமாத்மா நம்ம மன்னர்!
அவர் எங்கே இருந்தாலும் தன் மக்களை காண்கிறார்!


முக்காலமும் அறிந்த நம் மன்னர் நினைத்த நேரத்தில், நினைத்த இடத்தில் தோன்றுவார்!


அந்த கிராம மலைஜாதி மக்களும் தலைவரும் மாமன்னருக்கு மரியாதை செலுத்தினர்.
ஊர் தலைவரே! என்ன விஷயம்?
சுயம்பு மலை சக்ரவர்த்தியே! மாமன்னா! தங்கள் விஜயம் திக்விஜயம் ஆகட்டும்!


மாமன்னு!
இந்தப் பெண்தான்
இவளுக்கு புத்தி
சொல்லுங்க!


திருமணம்
தற்கொலைக்கு
சமம்!
கேளுங்க!


மன்னவா! இவர்கள்
என்னை உயிரோடு எரிக்க
இருக்காங்க!


அதற்கு
நீங்கள்தான்
காரணம்!
நானு?
எப்படி?


நீங்க
விரும்பினுல் என்னை
காப்பாற்றலாம்!


பெண்ணே!
உன் குல வழக்கப்படி
திருமணம் செய். சாவில்
இருந்து தப்பலாம்!


ஆமாம், மன்னவா! நானும் அதையே சொல்-கிறேன்.
என்ன அது?


அது இதுதான்! நீங்க என்னை மணக்க முடியுமா?
என்ன? !


மன்னர் பீமா திடுக்கிட்டார். பிரம்மச்சரிய விரதம் பூண்டவர் அவர்!
பிந்து என்னை புரிந்துகொள். என்னிடம் சில தெய்வீக சக்திகள் உள்ளன. நான் திருமணம் செய்த மறுகணமே அந்த சக்திகள் போய்விடும்!


நான் மட்டும் திருமணம் செய்ய வேண்டுமா?


நான் திருமணம் செய்யாமல் இருக்க எனக்கு உரிமை இருக்கு. ஒரு முட்டாளை மணந்து அவனுக்கு அடிமை -யாக நான் விரும்பலை!


பிந்து, நானே நீ மனம் மாறி...
ஒரு போதும் மாற மாட்டேன்!


நான் கன்னியாகவே வாழ்வேன், கன்னியாகவே சாவேன். இது உறுதி.
இந்த மலைஜாதி மக்களுக்கு நான் சேவை செய்ய விரும்புகிறேன். அதனால் திருமண பந்தத்தில் ஈடுபட விரும்ப வில்லை!


மாமன்னரே! அவளுக்கு பைத்தியம். அவளுடன் பேசி பலன் இல்லை!


என் லட்சியத்-துக்காக நான் தீக்குளிக்க தயார்! உம்...! நிறை-வேற்றுங்க!
இந்த பிரச்சினைக்கு என்ன தீர்வு என்று மாமன்னர் கூட திணறினர்!


பிந்து தீ குளிக்க சிதையை நோக்கி போனர்.
அது முடியாது மன்ன!
பெண்ணே நில்! இந்த இளம் வயதில் நீ சாகக்கூடாது.


மரணத்தில்
இருந்து தப்ப மணந்தே
ஆகணும்!


17 வயதுக்கு பின் எல்லா
பெண்களும் திருமணம் செய்வது
எங்கள் குல சட்டம்,
சம்பிரதாயம் எல்லாம்.
இல்லாவிடில்
இந்த பூமி
பிளக்கும்!
வானம் தீயை
கக்கும்!


எனவே
மாமன்னரே! வழி
விடுங்கள்! அவளை
சிதையில்
வீசுகிறோம்!
அதை நான்
தடுத்தால்...?


அடுத்த கணம்


மன்னர் பீமா "சுக்கு நூறுதான், சூழ்ந்து
வரும் பகை!" என்று பாய்ந்தார்!


அவர்களை பந்தாடினார்!

அந்த மோதல் பலத்தது. கிராமவாசிகள் அனைவரும் ஊர் தலைவரின் காவலர்களுடன் சேர்ந்துகொண்டனர்.







சரமாரியான தாக்குதலில் இருந்து பீமா தப்பிக்க முடியாமல் திணறினர்.

மலைஜாதி மக்கள் தங்கள் மன்னரையே மடக்கினர்!



பிந்துவுடன் ஒரு மரத்தில் மன்னர் கட்டப்பட்டார்!







அதன் காரணமாக நமது குலதெய்வம் பமாலியை மன்னர் அவமதித்து விட்டார்.


மன்னரை தண்டியுங்க!
மன்னரைவிட தெய்வம் பெரியது!


தெய்வத்துக்கு எதிரா யார் நடந்தாலும் தண்டனைதான்!
உம்! அவரையும் கொளுத்து!


அந்த கூட்டம் மன்னருக்கு மரண தண்டனை வழங்கியது!
தீயில் தள்ளுங்க!


குலத் துரோகி ஆன அந்தப் பெண்ணோடு சேர்த்து நம் மன்னரையும் தீயில் வீசுங்க!
வீரமும் உறுதியும் கொண்ட அந்த மலைஜாதியினர் குமுறினர்.


ஊர்த் தலைவர் கையை மேலே தூக்கினார்.


நமது உயிருக்கும் மேலான குல தெய்வத்தை அவமதித்த நம் மன்னர் தண்டிக்கப்படுவார் என உறுதி கூறுகிறேன்.


அவரை குலதெய்வத்துக்கு நரபலி கொடுக்கணும்!


அப்போது அழகி பிந்து மன்னர் காதில் கிசுகிசுத்தாள்—
என்னை மணக்க நீங்க சம்மதித்தால் இருவரும் தப்பலாம்!


மீண்டும் நடனம் தொடங்கியது.
ஹேரா...
ஹேரா...
ஹேரா...


மன்னர் பீமா ஆபத்தை எப்படி சமாளிப்பது என்று ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கி இருந்தார்.


அவர் மூளையில் ஒரு அற்புத திட்டம் உதித்ததும் அவர் சிரித்தார்.
நம்மை சாவு நெருங்குது! உங்களுக்கு சிரிப்பு வருதா?


என் முட்டாள்தனத்தால்தானே நீங்களும் மாட்டிக் கொண்டீர்கள்!


பிந்து அழுவதை நிறுத்து. நான் சொல்வதை கேள்!
மன்னர் அவள் காதில் தன் திட்டத்தை கூறினார்.


அடுத்த கணமே பிந்து உரக்க கத்தினாள்.
நரபலி நடனத்தை நிறுத்துங்க!


உடனே நடனம் நின்றது. அனைவரும் அமைதி ஆனார்கள்.
வேறு கடைசி ஆசை இருக்கா?


நான் திருமணம் செய்ய சம்மதிக்கிறேன்!
யாரை?


மன்னரையா?


மன்னர் யாரை மணக்கச் சொல்கிறாரோ அவரை மணப்பேன்!
உடனே எல்லா கண்களும் மன்னரை மொய்த்தன.


மன்னர் பீமா, பிந்து இருவரும் விடுவிக்கப் பட்டனர்.
மன்னரே! பிந்துவின் மாப்பிள்ளை யார்?
அவனை இனிதான் தேர்ந்து எடுக்கணும்!


அதற்கு எனக்கு கொஞ்சம் அவகாசம் வேணும்!


சரி! ஆனா, இவள் உயிரோடு இருக்க வேண்டுமானால் விடிவதற்குள் வாங்க!


உடனே மன்னர் பீமா புலி போல் பாய்ந்து புறப்பட்டார்.


காற்றை விட வேகமாக அவர் நடந்தார்.


மன்னர் வேகமாக நடந்து, அன்று இரவு அவர் முதல் முதலில் ராஜ சோதனைக்-காக ஓட்டு கேட்ட குடிசைக்கு வந்தார்.


மாமன்னரே வருக!
தீய வழிகளில் சென்றதால் மரணப் படுக்கையில் கிடக்கும் வாலிபனின் தகப்பனார் வரவேற்றார்.


உங்க மகன் எப்படி இருக்கிறான்?
அவன் வாழ்வு மணிக்கணக்கில் – தான் என்று வைத்தியர் கூறி விட்டார்


அவர் வேறு என்ன கூறினார்?


வாலிபனின் தகப்பனார் கூறினார்—
இன்று இரவு அவன் தாக்குபிடிப்பதே கடினம் சாவதற்கு முன் அவன் ஏதாவது நல்ல காரியம் செய்தால் அவன் ஆத்மா சாந்தி அடையுமாம்!


அவன் ஆவி, இங்கே சுற்றிக்கொண்டு தீங்கு செய்வதை நான் விரும்ப– வில்லை!


உங்க மகன் ஆத்மா சாந்தி அடைய ஒரு வழி இருக்கு!


மகாராஜா!
உண்மை—யாகவா?


அவனுக்காக நான் எதையும் செய்வேன். சீக்கிரம் சொல்லுங்க!


உடனே மாமன்னர் பீமா தனது திட்டத்தை அவரிடம் வெளியிட்டார்.
நான் சொல்றத கவனமா கேளுங்க!


அவன் சாவதற்கு முன் பிந்துவை திருமணம் செய்துகொண்டால் அவனை சாவில் இருந்து காப்பாற்றிய புண்ணியம் கிடைக்கும்!


என் திட்டத்தால் உங்க மகனுக்கு புண்ணியம், பிந்துவுக்கு புது வாழ்வு!
அந்தப் பெண் சம்மதிக்க வேண்டுமே!


அவள் சம்மதித்து விட்டாள்!


தகப்பனார் சம்மதித்ததும். செத்துக் கொண்டு இருந்த அந்த இளைஞனை மலை-மன்னர் பீமா தூக்கினார்.


பிந்துவுக்காக எரிந்துகொண்டு இருக்கும் சிதையை நோக்கி ஓடினார்.


காற்றைவிட நான்
வேகமா
போகணும்.


நேரம்
விடியப்
போகுது!
சூரிய கிரணம்
தெரிந்ததும்
பிந்து தீ குளிக்க
வேண்டும்!


மன்னர் நம்மிடம் இருந்து
தப்பிக்க இப்படி ஒரு உபாயம்
செய்து இருக்கார்.
ஆமா, அவர்
திரும்பி வரவே
மாட்டார்!


பிந்துவின் பெற்றோர்
பிரார்த்தனை —
கடவுளே! அவளை
காப்பாற்று!


திடீர் என்று—
அதோ
வானத்தைப்
பாருங்க!


ராம பக்த அனுமான்
மட்டுமே இப்படி
வானில் பறந்து
வரமுடியும்!


நமது
மன்னர், வாழும்
அனுமார்!

மணமகனுடன் மன்னர் வந்து சேர்ந்ததும்—

மன்னர், மன்னர் தான்!

மன்னர் தன் வாக்கை காப்பாற்றி விட்டார்!

எல்லோரிடத்திலும் ஒரே பரபரப்பு.

தலைவரே! சீக்கிரம் திருமணத்தை நடத்துங்க!

திருமண சடங்கு முடிந்தாச்சு! மணமக்கள் வரட்டும்!

அக்னி சாட்சியாக திருமணம் நடந்தது.


மணமகன் தீயை வலம் வர
மன்னர் உதவி செய்தார்.


திருமண சடங்குகள் முடிந்ததும், புது மாப்பிள்ளை துவண்டு விழுந்தான். உயிர் பிரிந்தது.
ஐயோ!


மன்னர் முன்கூட்டியே பிந்துவிடம் விஷயத்தைச் சொல்லி இருந்ததால் அவள் அதிர்ச்சி அடையவில்லை.
அவனது ஆத்மா சாந்தி அடை-யட்டும்!


பிந்துவுக்கு தயார் செய்யப்பட்ட சிதையில் வாலிபன் உடல் கிடத்தப்பட்டது.


சில நிமிடங்களில் அவன் உடலை நெருப்பு ஏப்பம் விட்டது!


சூரியன் உதித்தான். எல்லோரும் புறப்—பட்டார்கள். மன்னரும் புறப்பட்ட போது—
மன்னரே!


நான் ஒரு விசித்திர விதவை!
உன்னை காப்பாற்ற இந்த உபாயம்தான் தோன்றியது!


எனக்கு புது வாழ்வு அளித்து விட்டீர்கள். நான் உங்களுடன் வரவே விரும்பு—கிறேன்.


ஆமாம்! உங்களுடன் நானும் சேர்ந்து வசிக்கிறேன். உங்கள் கடவுளே என் கடவுள். உங்கள் மார்க்கமே என் மார்க்கம். உங்களுக்கு பணி செய்வதே என் பாக்கியம்!
நாம் நல்ல நண்பர்களாக வாழலாம்!

இதய சுத்தி உள்ளவர்களை மலை மன்னர் எப்போதும் அருள் பாலிப்பார்!




பிந்துவின் நல்ல உள்ளத்தையும், சேவை மனப்பான்மையையும் மன்னர் பீமா புரிந்து இருந்ததால், அவளை தன் நண்பர்களான குரங்கு மாருதி, சிங்கம் சிபி, குதிரை கல்யாண் ஆகியோர்களுடன் சேர்க்க புறப்பட்டார்.



முற்றும்

ராணி சிண்டிகேட் சார்பில் வெளியிட்டவர், ஆசிரியர்: எஸ்.ராமஜெயம், 1091,பெரியார் நெடுஞ்சாலை,சென்னை–600 007. அச்சிட்டவர்: சி.கல்யாணசுந்தரம்,ராணி அச்சகம்.1091,பெரியார் நெடுஞ்சாலை, சென்னை–600 007.




## 12. மர்ம உருவம்!

மனோஜ் போவதை, டிரைவர் மணி பயத்துடன் பார்த்துக் கொண்டே நின்றான். அவன் அருகே வந்து நின்றுகொண்ட திலகாவின் கண்களிலும் பயம் நெளிந்தது.

"மணி! அவர் தனியே எங்கே போகிறார், இந்த இருட்டு நேரத்தில்? நீ துணைக்கு போனால் என்ன?"—திலகாவின் குரலில் கரிசனம் தெரிந்தது.

"அம்மா! இன்று வாட்சுமேன் வஜ்ரவேல் வரவில்லை. அதனால் என்னை இங்கே இருக்கச் சொல்லி இருக்கிறார்கள்!" என்றான் மணி.

மணி, பெட்ரோமாக்ஸ் விளக்குகளை எரியவைக்கும் பணியில் ஈடுபட்டான்.

அவன் அருகிலேயே திலகா நின்றுகொண்டு இருந்தாள். மணி அவளிடம் "அம்மா! நீங்க மனோஜ் அய்யாவைப் பற்றி கவலைப்படாதீங்க. 10 மணிக்குள் திரும்பி வந்துடுவாங்க. நீங்க போய் ஓய்வு எடுங்க!"

திலகா ஒன்றும் பேசாமல் போய்விட்டாள். அவள் மனம் சரி இல்லை என்பதை அவள் நடை காட்டியது.

மனோஜ் மீது திலகா காட்டிய அன்பும், அக்கறையும் மணியை வியப்புற செய்தன.

கண்களை கூர்மை ஆக்கிக்கொண்டு மனோஜ் ஜீப்பை செலுத்தினான்.

இதுவரை இல்லாத ஒரு தீவிரம் அவனிடம் காணப்பட்டது.

ஏதோ மனதுக்குள் தீர்க்கமாக எடுக்கப்பட்ட ஒரு முடிவை செயல்படுத்துவது போல் அவன் முகம் துல்லியமாக காணப்பட்டது. எந்தவித குழப்பமும் இல்லாமல் அவன் முகம் தெளிவாக இருந்தது.

ஆனால் அதற்கு நேர் எதிராக வானம் கருத்துப் போய், குழம்பிக் கிடந்தது. பகலில் பிடித்த தூறல் தொடர்கதையாக நீண்டு கொண்டிருந்தது.

முன் கண்ணுடியில் முத்து முத்தாய் இறங்கிய மழை மணிகளை வைப்பரால் விலக்கியபடி ஜீப் விரைந்து கொண்டிருந்தது.

100 சதவித இருள் பாதையை, ஜீப் விளக்குகள் விலக்கின.

ஜீப், ஆஸ்பத்திரி முன் வந்து நிற்கவும், ஆஸ்பத்திரியில் இருந்து டாக்டர் வெளியே வரவும் சரியாக இருந்தது.

"டாக்டர் சார், புறப்பட்டுவிட்டீர்களா?" என்ருன், மனோஜ்.

"இன்றைக்கு லேட்! இல்லை, இன்னும் முன்னதாக போய் விடுவேன்!" என்று முறுவலித்தார், அந்த டாக்டர்.

"அந்த பேசண்ட் முத்தம்மா எப்படி டாக்டர் இருக்கிருள்?"

"இன்னும் அபாய கட்டம்தான். இன்று இரவு தாக்குபிடித்துக்கொண்டால், நாளை சரியாகலாம்!"

டாக்டர் புறப்பட்டார்.

மனோஜ் அந்த சின்ன ஆஸ்பத்திரி வராந்தாவில் நடந்தான்.

அதோ, முத்தம்மாள் படுத்திருக்கும் கட்டில்.

மனோஜ் அமைதியாக, மெதுவாக அவள் அருகே சென்ருன்.

அவள் அருகே கவலையும், கண்ணீருமாக நின்றிருந்த வாட்சுமேன் வஜ்ரவேலு மனோஜை பார்த்ததும், விசும்பத் தொடங்கினன். மனோஜ் அவனை ஆசுவாசப்படுத்தினன்.

"வஜ்ரவேல்! கவலைப்படாதே! டாக்டரை பார்த்தேன். நம்பிக்கையாக பேசினர். நாளை எல்லாம் சரியாகப் போய்விடும். இன்று இரவு மட்டும் கண்ணும் கருத்துமாக பார்த்துக்கொள்!"

மனோஜ், இரவு நர்சையும் பார்த்து பேசிவிட்டு, ஜீப்புக்கு வந்தான்.

அவன் பின்னலேயே வஜ்ரவேலு வந்தான்.

மனோஜ் ஜீப்பில் ஏறிக்கொண்டதும் "வஜ்ரவேல், வருகிறேன்!" என்ருன்.

வஜ்ரவேல் மீண்டும் அழுதுவிடும் நிலைக்கு வந்தான்.

மனோஜ் மணிபர்சை எடுத்தான். இருபத்தி ஐந்து ரூபாய் எடுத்து வஜ்ரவேல் கையில் கொடுத்து "செலவுக்கு வைத்துக் கொள்!" என்று கூறிவிட்டு, ஜீப்பை கிளப்பினன்.

மழை கொஞ்சம் குறைந்து இருந்தது.

"பகலிலேயே, டாக்டரைப் பார்த்து இருக்க வேண்டும்!" என்று மனோஜ் மனதுக்குள் சொல்லிக்கொண்டான்.

முத்தம்மாள் பிழைத்துக்கொள்வாளா? அவள் ஏன் விஷம் குடித்தாள்? இந்த கேள்விகளுக்கு இன்னும் பதில் கிடைக்கவில்லை.

ஜீப் விர்ரென்று போய்க்கொண்டு இருந்தது.

மழை இல்லாவிட்டாலும், இருட்டு கனத்து இருந்தது.

ரோடு நெடுக அங்கும் இங்குமாக தண்ணிர் கட்டிக் கிடந்தது.

அதனால் ஜிப்பை வேகமாக செலுத்த முடியவில்லை. ஊதல் காற்று உடலை ஊசியால் குத்தியது.

மனோஜ் கவனம் அந்த மண் ரோட்டில் இருந்தாலும், அவன் எதையோ ஆழ்ந்து சிந்தித்துக்கொண்டு இருந்தான்.

அமாவாசை இருட்டு, "நை, நை" என்று பெய்துகொண்டிருக்கும் மழை இவற்றின் இடையே இன்று இரவு என்ன நடக்கப் போகிறது என்ற கேள்விக்குறி.

ஜீப் எஸ்டேட்டை நெருங்கியது.

திடீர் என்று என்ன அது?

ரோடு ஓரத்தில்! கருப்பாக!

மனித உருவமா அது?

தலையில் கருப்பு போர்வையால் முக்காடு போட்டு இருக்கிறதா?

தலை தெரியவில்லையே!

மனோஜ் விறுவிறுப்பு அடைந்தான்.

ஜீப் வேகத்தை அதிகரித்தான்.

கண் இமைக்கும் நேரத்துக்குள் அந்த உருவம் செடி கொடிக்குள் மறைந்தது.

ஜீப்பை விரட்டிக்கொண்டு போய், சரேல் என்று நிறுத்திய மனோஜ், ஒரு கையில் டார்ச், இன்னொரு கையில் துப்பாக்கியுடன் குதித்து ஓடினான்.

எங்கே அந்த உருவம்?

எப்படி மாயமாய் மறைந்தது?

மனோஜ் டார்ச் வெளிச்சத்தில் செடி கொடிக்குள் ஓடி ஓடிப் போய் தேடினான்.

அவனுக்கு மூச்சு இரைத்ததுதான் மிச்சம்.

அந்த உருவத்தைக் காணவில்லை. காணவே இல்லை.

அதைத் தேடி காட்டுக்குள் வெகுதூரம் வந்துவிட்டதை மனோஜ் உணர்ந்தான்.

இனி தேடி பலன் இல்லை என்ற முடிவில் அவன் திரும்பினான்.

டார்ச் ஒளியில் கைக்கெடிகாரத்தை பார்த்தான்.

மணி 10.

மீண்டும் அவன் ஜீப்பில் ஏறிக்கொண்டு பங்களாவுக்குப் புறப்பட்டான்.

அவன் உள்மனம் உறுதியாக கூறியது. இன்று இரவு ஏதோ பயங்கரம் நடக்கப் போகிறது, என்று.

இந்த நேரத்தில் முதலாளியும், திலகாவும் வந்திருந்தது. அவனுக்கு கவலையை அளித்தது.

ஜீப் பங்களாவுக்குள் நுழைந்தது.

வராந்தாவில் மணி இருந்தான். அவனிடம் மனோஜ், "மணி! முத்தம்மாளைப் பார்க்க போய் இருந்தேன். இன்னும் அபாய நிலையில்தான் இருப்பதாக டாக்டர் கூறினார். நாளை சரியாக லாம்!"

"இன்று விடியணுமே சார்!" மணி கவலையாக கூறினான்.

அவன் என்ன அர்த்தத்தில் கூறினான்?

மனோஜ் போகும்போது ஒரு ஓரமாகப் படுத்திருந்த சதாசிவம், பெரியசாமி இருவரையும் காணவில்லை.

அதைக் கவனித்த மனோஜ், "கணக்குப்பிள்ளை, மேஸ்திரி இருவரையும் எங்கே?" என்று கேட்டான்.

"வெளியில் போய்விட்டு வருவதாக கூறிச் சென்றார்கள்!"

மனோஜுக்கு தூக்கி வாரிப் போட்டது. அதை வெளியில் காட்டிக்கொள்ளாமல், "வெளியில் போய் இருக்கிறார்களா? அதுவும் இந்த நேரத்திலா?" என்று வியப்பை வெளிப்படுத்தினான்.

"அதோ வந்துவிட்டார்களே!"

டிரைவர் மணி காட்டிய திசையில் மனோஜ் பார்க்க, இருட்டோடு இருட்டாக இருவரும் வந்துகொண்டு இருந்தார்கள். இருவரும் தலையை கருப்பு போர்வையால் போர்த்திக்கொண்டு இருந்தார்கள்!

மனோஜ், வழியில் பார்த்த உருவமும் இப்படித்தான் இருட்டில் போர்வையால் தலையில் போர்த்திக்கொண்டு இருந்தது.

மனோஜ் சந்தேகத்தால் குழம்பிக்கொண்டு இருக்கையில், கணக்குப்பிள்ளையும் மேஸ்திரியும் வந்து சேர்ந்தார்கள்.

"அப்பாடா, என்ன இருட்டு! என்ன குளிர்!"

மனோஜ் அவர்கள் அருகில் சென்று "இருவரும் சாப்பிட்டு விட்டீர்களா?" என்று கேட்டான்.

"ஆமாம்!" என்பதற்கு அடையாளமாக இருவரும் தலையை ஆட்டினார்கள்.

"சரி, படுத்துக்கொள்ளுங்க!"

பிறகு மனோஜ், டிரைவர் மணியிடம் "சாப்பிட்டாயா?" என்று கேட்டான். அவனும் தலையை அசைத்த பின், சமையல் அறைக்கு நடந்தான்.

சமையல்காரன் "குப்! குப்!" என்று சுருட்டை வேகமாக இழுத்துக்கொண்டிருந்தான். திடீர் என்று மனோஜைப் பார்த்ததும், எழுந்துகொண்டு அஷ்டகோணலாக நெளிந்தான்.

மனோஜ் அவனிடம் "சாப்பிட என்ன வைத்திருக்கிறாய்? திரும்பவும் பசிக்கிறது!" என்று கேட்டான். அதற்கு அவன், "சப்பாத்தி, கறிக் குருமா" என்றான்.

"கொண்டா, ஒரு பிடி பிடிக்கிறேன்!"

மனோஜ் டைனிங் டேபிளில் அமர்ந்தபடியே சுற்றுமுற்றும் நோட்டமிட்டான்.

அதோ அந்த கூடை மீது என்ன? கருப்பு போர்வையா? விருட்டென்று எழுந்து போய் பார்த்தான்.

போர்வைதான். கருப்பு நிற போர்வை. அது மழையில் நனைந்தும் இருந்தது.

சமையல்காரன் இப்போதுதான் வெளியில் போய்விட்டு வந்திருந்தானா?

மனோஜ் ரோட்டில் பார்த்த உருவம்—அது போர்த்தி இருந்த போர்வை—

போர்வையை மனோஜ் தூக்கினான்.

உள்ளே இரண்டு சாராய பாட்டில்கள் இருந்தன!

போர்வையை அவற்றின் மீது, முன்பு இருந்தபடியே போட்டுவிட்டு, சாப்பாட்டு டேபிளுக்கு திரும்பினான்.

சாப்பிடும்போது, அவன் மனம் அசை போட்டது. இந்த முனியாண்டி?

சமையல்காரன் மீது முதல் முறையாக மனோஜின் மொத்த சந்தேகமும் குவிந்தது. ஆனால் வெளியில் காட்டவில்லை.

சாப்பிட்டுவிட்டு எழுந்த மனோஜ், சமையல்காரன் முகத்தை பார்க்காமல், "நீ சாப்பிட்டுவிட்டு தூங்கு" என்று கூறிவிட்டு சென்றான்.

பிறகு மணியை அழைத்துக்கொண்டு மேலே போனான். "மணி! இன்று இரவு நம் இருவருக்கும் சிவராத்திரி!"

மேலே முதலாளி விசுவநாத்தின் அறையில் வெளிச்சம் இல்லை. தூங்கிவிட்டாரா?

திலகா அறையில் வெளிச்சம் தெரிந்தது.

கதவைத் தட்டினான். "யாரது?" உள்ளிருந்த குரல் கேட்டது.

"மனோஜ்."

கதவைத் திறந்த திலகா, புன்னகை பூத்தாள்.

அவளது சிவப்பு நிற ஆடை மீண்டும் அவன் கண்ணைக் குத்தியது.

இப்போது அந்த எஸ்டேட்டுக்குள் கொலைப் பாறை வழியாக ஒரு உருவம் பங்களாவை நோக்கி வந்துகொண்டிருந்தது.

மணி 11 முறை கட்டியம் கூறியது.

(இந்தக் கதையின் தொடர்ச்சி அடுத்த இதழில் வெளிவரும்.)



# 'சூப்பர் ஹீரோ' டைகர் தூள் பறத்தும் கொலைச்செடி!

1

சர்வதேச பயங்கரவாதிகள் ஒழிப்பு நிறுவனத்தை சேர்ந்த ஒரு ஏஜெண்ட் அந்தக் கப்பலில் வந்து இறங்கினார்.

அப்போது அவர் தலைக்கு மேல், பளு தூக்கும் இயந்திரத்தில் கயிறு அறுந்து...

அந்த ஏஜெண்டை சந்திக்க, சர்வதேச பயங்கரவாதிகள் ஒழிப்பு நிறுவனத்தின் "சூப்பர் ஹீரோ" டைகரும், வெடிகுண்டு நிபுணர் ஹென்றியும் அங்கே வந்தனர். ஆபத்தை பார்த்த டைகர்—

ஹென்றி! நம்ம ஆள் தலை மேலே விழுகிறது பார்!




டைகர், இடது கை உறையைக் கழற்றினார்.
இது பயங்கர—-வாதிகள் இயக்க சதி வேலை!


கை உறை தன்னை நோக்கி வருவதை பார்த்து ஆம்புலன்ஸ் அதிகாரி—
அங்கேயே நில்!


கை உறை அவரை தாக்கி மின் காந்த அலையை பாய்ச்சியது!


காயம் அடைந்த ஏஜெண்டு—
ஹென்றி! அவர் கெடிகாரத்தை கழற்று. அதன் மெயின் ஸ்பிரிங் மினி டேப் ஆகும்.
கை கெடிகாரம் இல்லை!


கெடிகாரத்தை எடுத்து இருந்த பயங்கரவாதி—
தவறான ஆட்கள் கையில் சிக்கும்போது அந்தக் கெடிகாரத்தை நாம் தொலைக் கட்டுப்பாடு கருவி மூலம் உடைத்து-விடலாம். அதன்படி அது உடையுது!


மரணப் படுக்கையில் கிடந்த ஏஜெண்ட்—
பயங்கரவாதிகள்— பழக்கப்பட்ட திமிங்கலம்— தொழிற்சாலை— கப்பல்...


அந்த ஏஜெண்ட் இறந்துவிட்டார்.
பழக்கப்பட்ட திமிங்கலங்கள் என்று அவர் ஏதோ சொன்னாரே!
திமிங்கலங்கள் பற்றிய நிபுணரை பார்ப்போம்!


அவர்கள் ஹெலிகாப்டர் மூலம் கடற்படை கப்பலுக்கு போனார்கள்.
இந்தப் பக்கம் உள்ள திமிங்கலங்கள் பயங்கர ஜந்துக்கள். 50 அடி நீளமும் 100 டன் எடையும் கொண்ட அவை எமனின் ஏஜெண்டுகள்! அதோ ஒரு திமிங்கலத்தை நோக்கி நம் படகு...


ஆனால் அந்தப் படகு, திமிங்கலத்தின் மீது ஈட்டி துப்பாக்கியை சுடும் முன்—
அந்த திமிங்கலம் வெடித்து விட்டதே!
இது பயங்கர—வாதிகள் வேலைதான்! ஹென்றி வா! அடுத்த திமிங்கலத்தை பின் தொடர்வோம்!


டைகரும், ஹென்றியும் ஒரு குட்டி நீர்மூழ்கி கப்பலில் ஏறி சென்றனர்.
அந்த பெரிய பனிப் பாறை பக்கம் வந்து விட்டோம்!


அவர்கள் மேலே வந்ததும்...
திமிங்கலம்!

திமிங்கலம் எழுந்த வேகத்தில் அலைகளால் கவிழ்க்கப்பட்டு குட்டி நீர்மூழ்கி கவிழ்ந்தது.

மயக்க மருந்து உள்ள இந்த ஈட்டியை திமிங்கலத்தில் செலுத்துகிறேன். அது அதை அமைதி படுத்தும்.

டைகர் கரை நீந்தியபோது—

இது உண்மையான பனிப் பாறை அல்ல.

அடுத்த வினாடி—

அந்த பிரமாண்டமான செயற்கை பனிக்கட்டிக்குள்—

அவங்க ரெண்டு பேரையும் நல்லா சோதனை போடுங்க!

நல்லா சோதனை போட்டுவிட்டோம். எந்த ரகசிய ஆயுதமும் இல்லை.

சரி! அவர்கள் சாவதற்கு முன் என் செல்லப் பிராணிகள் செய்யும் வேலையைப் பார்க்கட்டும்!

அந்த திமிங்கலங்கள் சமிக்ஞைக்கு கட்டுப்படும்படி பழக்கப்பட்டு உள்ளன. அவற்றால் உலக கப்பல்களை அழிப்பேன்!







மின் அலைகளை பாய்ச்சிய அந்த "விக்" பனிக்கட்டி கப்பலில் மின் இணைப்புகளை வெடிக்கச் செய்தது!


ஐயோ! சமிக்ஞை கட்டுப்பாடு கருவி உடைந்துவிட்டது. திமிங்கலங்கள் நம்மை நோக்கி வருகின்றன!


நம்ம பனிக் கப்பல் உடையுது!
ஹென்றி ஓடிவா!

பயங்கரவாதிகள் கப்பல் மூழ்கியது.- அதனல் திமிங்கலங்களுக்கு உத்தரவு போடும் சமிக்ஞை நின்றுவிட்டதால், திமிங்கலங்கள் சுதந்திரமாக போக தொடங்கின.







சர்வதேச பயங்கரவாதிகள் ஒழிப்பு நிறுவன தலைமை நிலையம்—
டைகர்! "செவ்வாய் கிரக பயணம்" என்ற புதிய சினிமா படப்பிடிப்பு பற்றி ஒரு தகவல் வந்து இருக்கு. இந்தப் படத்தை பெரிதாக்கி பார்க்கணும்!


ஒரு இடத்தில் ஒரு பயங்கர முகம் தெரிந்தது.
இவர் பேராசிரியர் கிராணிக். பயங்கரவாதிகள் இயக்கத்தைச் சேர்ந்தவர்!
ஆமா டைகர்! அதனால் நீயும் ஹென்றியும் அங்கே போய் பாருங்க!


அந்த இடத்தை சுற்றி பலத்த காவல் போட்டு இருக்காங்க. ஆனால் தினமும் மதியம் ஒரு சப்ளை லாரி போய் வருது!
நானும் ஹென்றியும் அங்கு போகிறோம்!


அன்று மதியம். லாரிக்காக டைகரும், ஹென்றியும் காத்து இருந்தனர்!
எனது கண்ணி வெடி கச்சிதமா வெடிச்சுது!
அந்த டிரைவர், டயரை மாற்றும் வரை இங்கேயே இருப்போம்!

பிறகு—

ஹென்றி! நீ கண்ணாடியைக் கழற்றிவிட்டால், இந்த டிரைவர் மாதிரியே இருக்கே. ஆகையால் லாரியை நீ ஓட்டு. நான் பின்னால் மறைந்து இருக்கேன்!

லாரி உள்ளே போனதும்—

டைகரை இவர்கள் பார்க்காதபடி உபாயம் செய்கிறேன்.

நில்! உள்ளே வர அனுமதி சீட்டு எங்கே?


அவனை சுட்டுத்தள்ளு.
அடப் பாவிகளா! இந்த கட்டிடத்துக்குள் நுழைகிறேன்!


மீண்டும் ஹென்றிக்கு ஆபத்து!
இது சினிமா "செட்" தான். கட்டிடம் இல்லை!
இந்தா இங்கே வாரான்!


திடீர் என்று அங்கே டைகர் வந்தார்.
டைகர்! நீ வந்த வேலையை பார்த்து இருக்கலாம்!
ஆ! ஆ!


அங்கு இருந்து தப்பித்த அவர்களுக்கு மீண்டும் சோதனை!
நில்! இல்லை சுடுவேன்!
அந்த ஆர்க் விளக்கு களால் கண் கூசும்படி செய்கிறார்கள்!


இருவரும் பேராசிரியர் கிரானிக் முன் நிறுத்தப்பட்டனர்.
சினிமா படப்பிடிப்பு நடப்பது போல் வெளியே காட்டிவிட்டு இங்கே உம் நாச வேலையில் சுதந்திரமா ஈடுபட்டு உள்ளீர். இல்லையா?
சினிமா செட் ராக்கெட்டை நீக்கிவிட்டு உண்மையான ராக்கெட்டை நிறுத்தி உள்ளோம். அதில் டன் கணக்கில் வெடி மருந்து இருக்கு!


இன்னும் ஒரு மணி நேரத்தில், அந்த ராக்கெட் புறப்பட்டு, லண்டனை தாக்கி அழிக்கும். அந்த ராக்கெட்டில் உன்னையும் அடைக்கிறேன்!

ராக்கெட்டுக்குள் இருவரும் அடைக்கப்பட்டனர்.

டைகர்! நீ சொன்னபடி உன் கெடிகாரத்தை உதைக்கிறேன்!

அதில் ஒரு ரம்பம் வெளிவரும்!

அந்த ரம்பத்தின் உதவியால் ஹென்றியின் கட்டை, டைகர் அவிழ்த்தார். பிறகு ஹென்றி டைகரின் கட்டை அவிழ்க்க—

பயங்கரவாதிகள் என்னை சோதித்து துப்பாக்கி, கத்தி எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டனர். இந்த பேனா மட்டும்தான் தப்பியது!

இந்தப் பேனா, ஒரு அணு வெல்டிங் கருவி என்பது அவங்களுக்கு தெரியாது!

நீ ராக்கெட்டில் ஓட்டை போடும்போது நான் இன்னொரு வேலை செய்கிறேன்!

45 நிமிடம் கழித்து—

அதுசரி! எப்படி கீழே இறங்குவது?

ஹென்றி! என்னை பிடித்து தொங்கிக் - கொள்!







ராக்கெட் கட்டுப்பாடு நிலையம்.

ராக்கெட் புறப்படட்டும்!

FIRE

பிறகு—

ராக்கெட் நேர் மேலே போகுது. வேகம் குறைந்து விட்டது. பிறகு நேர் — கீழே இறங்குது.

அப்படீன்னா இந்த இடத்தையா தாக்கும்?

அது சரியாக அவர்கள் இடத்தையே தாக்கி எல்லோருக்கும் சிவ லோக - பதவியை கொடுத்துவிட்டது. டொப்ட டாங்!

டமார்

நீ ஒட்டை போட்டபோது, நான் ராக்கெட் போகும் பாதைக்கான இயக்கத்தை மாற்றி அமைத்தேன்.


3
அந்த பாலைவனத்தில் திடீர் என்று ஒருவகை நச்சுச் செடி வளர்ந்தது. அது பிரமிக்கதக்க விதத்தில் வேகமாக பரவியது.
வேகமா தெளி! அவற்றை அழி!
இவை எண்ணைக் கிணறுகளை அழித்து விடும்!


அந்த பாதாள அறையில் உள்ள, சர்வதேச பயங்கரவாதிகள் ஒழிப்பு நிறுவன தலைமை நிலையத்தில்—
அந்த நச்சுச் செடி எப்படி எண்ணை கிணறுகளை அழிக்கிறது என்று வீடியோ படம் பார்த்தோம். பேராசிரியர் ஜீரோ! உங்க கருத்து என்ன?


தலைமை விஞ்ஞானியான ஜீரோ குழம்பினார்.
அந்த நச்சு செடியை ஆராய்ந்து பார்த்தோம். தாவர இயலுக்கு அப்பாற்பட்டு அதில் ஏதோ இருக்கு!




டைகர் நெல்சனும், ஹென்றியும் ஹெலிகாப்டரில் பறந்து பார்த்தனர்.

பாலைவனம், சோலைவனமா இருக்குதே!

ஹென்றி! இங்கே பார்! ஒரு பாதை போகுது! அதில் ஒருவன் ஒட்டகத்தில் போகிறான்!

அதில் ஏதோ மர்மம் இருக்கு. இறங்கிப் பார்ப்போம்!

இங்கேதான்! மண்ணுக்கு அடியில் இரும்பு கதவு இருக்கு! சுருமருந்தை கொண்டு வா!

சரி!


உலோகத்தை உருக்கி வெட்டக்கூடிய ஒருவகை கருமருந்தை ஹென்றி கண்டுபிடித்து இருந்தார்.
சுற்றிவர வெட்டி எடுத்து விடலாம்!
இதுதான் வாசல் ஆக இருக்கும்!


உள்ளே...
ஒட்டகத்தில் வந்த அரேபியன் இப்படித்தான் வந்து இருக்கணும்!


டைகர்! ஆபத்து! ஆபத்து!


அம்மான் ராஜ பரம்பரையினர் சமாதிக்கு வந்திருக்கும் உங்களை வரவேற்கிறோம்!


ஹென்றி! பயம் வேண்டாம்!




டைகரும், ஹென்றியும் ஒரு கூண்டில் அடைக்கப்பட்டனர்.

இவர்கள் பயங்கரவாதிகள்! தலைவர் சொன்னது சரி!

இந்த மாபெரும் கல்லறையை கண்டு பிடித்தது எங்கள் அதிர்ஷ்டம்! ஒரு காலத்தில் நைல் நதி பிரதேசத்தில் பரவி இருந்த நச்சு செடியை இங்கேதான் கண்டுபிடித்தோம்! இந்த நச்சுச் செடியை எடுத்து நவீன ரசாயன உரம் மூலம் வேகமாக படரச் செய்து உள்ளோம்.


அந்த கொலைச் செடி, இந்த உலகத்தையே சாப்பிட இருக்குது! முதலில் அந்த நச்சுச் செடி உங்க ரெண்டு பேரையும் மூடி அழிக்கும்!


நச்சு செடியை சந்திக்க தயார் ஆகுங்க.
கூண்டைச் சுற்றி மண் தொட்டி இருந்தது.
ஹென்றி பதற்றப் படாமல் இரு!
செடி, கொடி என்றாலே எனக்கு பிடிக்காது.


கூண்டைச் சுற்றி நச்சுச் செடி வளர விடப்பட்டது.
டைகர்! என் தொப்பிக்குள் கருமருந்து பொட்டலம் இருக்கு!
ஹென்றி! இந்த பூட்ஸ் அடியில் ரேடியோ கருவி இருக்கு! அதை எடுத்து பேசுகிறேன்!


எகிப்தின் பழங் கடவுளான அம்மான் பேசுகிறேன்! பாலைவன மக்களே! கேளுங்க!

டைகர் பேசியது. அங்கே இருந்த
அம்மான் கடவுள் பேசியது போல்
அரேபியர்களுக்கு கேட்டது!

ஒரு காலத்தில் நைல் நதி தீரத்தை அழித்த நச்சுச் செடி, இனி அரேபியர்களையும் அழிக்கப் போகுது. அதனால், நீங்கள் மாஸ்டர் என்று அழைக்கும் அந்த மனிதனை அழித்துவிடுங்க!




கரு மருந்தால் கம்பியை உருக்கி விட்டாயா? இனி தப்பிப்போம்!


முட்டாள்களே! நில்லுங்க! உங்க மீது நச்சு செடி விதைகளை தூவி உங்களை குருடு ஆக்குவேன்!
இதோ நம்மை ஏமாற்றும் மாஸ்டரும் அவர் ஆட்களும்! கொல்!


ரேடியோ கருவியை மீண்டும் பயன் படுத்துவேன்!
ஏய்!
பார்னி! வலப்புறம் திரும்பிப் பார்!


ஹென்றி! கைவரிசையை காட்டு!
ஐயோ!
விடமாட்டேன்!


டைகரின் பண்ணை வீட்டில்...
டைகர்! ஒரு நல்ல செய்தி! மின்னல் வேகத்தில் பரவக்கூடிய கொலைச் செடியின் விதைகளை அழிக்கக் கூடிய ரசாயன மருந்தை கண்டுபிடித்து விட்டேன். அதற்கு நீதான் காரணகர்த்தா. இப்போ செடிகளை அழிக்கும் வேலை மும்முரமா நடக்குது!


வெரிகுட்! இங்கே நம்ம ஹென்றி. கண்ணில் பட்ட எல்லா செடிகளையும் குளோஸ் பண்ணுகிறுன்!
என்னைத் தடுக்காதே டைகர்! ஒரு கொடி என் கழுத்தை நெரித்து கொல்வதாக ராத்திரி கனவு கண்டேன். எனவே ஒரு செடியையும் விடமாட்டேன்!

4

இந்திய வானவெளி நிபுணர் மேஜர் சர்மாவை, இங்கிலாந்து வானவெளியில் அனுப்பி சோதனை நடத்த இருந்தது. அதற்காக அவர் போய்க்கொண்டு இருந்தார். அவரைக் கடத்த பயங்கர-வாதிகள் திட்டமிட்டு இருந்ததால், "சர்வதேச பயங்கரவாதிகள் ஒழிப்பு நிறுவன"த்தின் அதிரடி ஏஜெண்ட் டைகரும், வெடி-குண்டு நிபுணர் ஹென்றியும் அவருக்கு பாதுகாப்பாக சென்றனர்.

ஒரு எக்ஸ்பிரஸ் ரெயிலில் கடைசியாக இணைக்கப்பட்டு இருந்த சொகுசு பெட்டியில் மூவரும் இருந்தனர்.



ஆனால் திடீர் என்று பயங்கரவாதிகள் கைவரிசையைக் காட்டினர்.




ஹெலிகாப்டர் கீழே இறங்கியதும், வீரர்களை பயங்கரவாதிகள் வீழ்த்தினர்.

ஆ! ஐயோ!


ரெயில் பெட்டிக்குள் பயங்கரவாதிகள்—
டைகர்! ஒரு டைம்பாமை வைக்கிறேன். இந்த ரெயில் பெட்டி குகைக்குள் போகும்போது அது வெடிக்கும். நீங்க மூணு பேரும் வான மண்டலத்துக்கே போய்விடலாம்!


பயங்கரவாதிகள் போனதும்...
இந்த கெடிகாரத்தில் ஒரு ரம்பம் இருக்கு!


ஆகா! அது எவ்வளவு வேகமா வெட்டிவிட்டது!


கெடிகார பாட்டரியால் இயங்கும் அந்த ரம்பத்தின் உதவியால் மூவரும் தப்பித்தனர்.
நல்லவேளை! பயங்கரவாதிகள் இந்த ஹெலிகாப்டரை நாசம் செய்யவில்லை. நாம் உடனே வானவெளி ஆய்வு நிலையம் போக வேண்டும்!


ஆய்வு நிலையம் வந்ததும்...
நம்ப மாட்டோம்! மேஜர் சர்மா ஏற்கனவே திரும்பி வந்து விட்டார்!
அவன் பயங்கர-வாதிகளின் டம்மி ஆளா இருப்பான்! எங்கே அவன்?
உடல்பயிற்சி நிலையத்தில் இருக்கிறார்!


கைது செய்யுங்க! அவன் பயங்கரவாதிகள் இயக்க உளவாளி!


ஆனால் அடுத்த கணம்...
நமது வான ஆய்வு நிலையத்தை உளவு அறிய வந்து இருக்கான். பிடியுங்க!


ஆனால் சர்மா வேடத்தில் வந்த அந்த உளவாளி தப்பி ஓடி ஜெட் தூக்கி இயந்திரம் மூலம் பறந்துவிட்டான்!
அது படு ரகசியமான நமது நவீன கண்டுபிடிப்பு. அதையும் கொண்டு போகிறான்!


விசித்திரமாக தோற்றம் அளித்த ஒரு வானவெளி கப்பலில் டைகர் ஏறிக்கொண்டார்.
அவனை பிடித்து வருகிறேன்!


அப்போது இன்னொரு பிரமிக்கதக்க வாகனம் வந்தது.
என்ன இது?


இவர்கள் அனைவரும் பயங்கரவாதிகள். அடித்து நொறுக்கு!


ஒரு பயங்கரவாதியை டைகர் பிடிக்க, இன்னொரு பயங்கரவாதி ஒரு குண்டை வெடித்தான்.


சர்மா போல் மாறுவேடத்தில் வந்த பயங்கரவாதி தப்பிவிட்டானே! எப்படி பிடிக்க?
அவன் போகட்டும். முதலில் நாசவேலையை தடுப்போம்!


டைகர், தன் கோட்டில் ஒரு பொத்தானை பிய்த்து எடுத்தார். அதை அவனை சாப்பிட வைத்தார்.


அதை சாப்பிட்டதும் என்ன நடக்கும்?
உண்மையை வரவழைக்கும் மாத்திரை இது. சாப்பிட்டதும் உண்மையை கக்குவான்!


பல மாதமா பயங்கரவாதிகள் இயக்கம் இந்த சதியை உருவாக்கியது. ராக்கெட் கட்டுப்பாடு நிலையத்திலும் எங்கள் ஆட்களை டுப் போட்டு உள்ளோம்!


ஐயோ. ராக்கெட் பறக்குது! அதில் மேஜர் சர்மா இருக்காரே!
ராக்கெட்டின் முனைக்கூம்பு தனியாக கழன்று கடலில் விழும். அதில் சர்மா இருப்பார். அவரை கடலில் இருந்து தூக்க ஒரு கப்பல் தயார்.


ராக்கெட் கட்டுப்பாடு அறைக்குள் டைகர் வீரர்களுடன் நுழைந்தார்.
எல்லாரையும் கைது செய்து வெளியே கொண்டு போங்க. வேகமா செயல்படணும்!


ஹென்றி! உடனே நாம் விமான நிலையம் போகணும்.
வானவெளியில் ராக்கெட் பறக்கும் நிலவரத்தை டைகர் டி. வி. திரையில் பார்த்தார். ராக்கெட் 3 பிரிவுகளாக பிரிவது தெரிந்தது.


விமான நிலையத்தை அவர்கள் அடைந்ததும்—
சர்மா இருக்கும் கூம்பு கடலில் விழாமல், மலையில் விழுந்து நொறுங்கும் வகையில் பயங்கர— —வாதிகள் ராக்கெட்டை பறக்கவிட்டு உள்ளனர்.
அவர் மலையில் விழுவதற்கு முன் காப்பாற்ற வேண்டும்! உம், குயிக்!


பிறகு—
ஹென்றி! மேஜர் சர்மா சரியாக நம்ம பாதுகாப்பு வலையில் வந்து விழுவார்! டொட்ட டாங்!




ஆனால் அதற்குள் எக்ஸ், அந்த கேமராவை எடுத்து—

கிளிக்!

ஏய் ஹென்றி! இது என்ன கேமரா? விளக்கமா சொல்!

ஐயோ போச்சு! அந்த இரும்பு 'ரேக்' நாசமாச்சு!

சார்! இந்த கேமராவை கிளிக் செய்ததும் இதில் இருந்து கண்ணுக்கு தெரியாத மின் வெப்ப அலேகள் பாய்ந்து போய், இரும்பை ரப்பர் போல் இளக்கி உருகச் செய்து விடும்!

அதை மீண்டும் இரும்பாக மாற்றும் உபாயத்தை ஹென்றி இன்னும் கண்டுபிடிக்கவில்லே!






3 கார்களும் ஒன்றுடன் ஒன்று மோதின.















மிஸ்டர் ஹென்றி! இங்கே கார் சுவற்றில் மோதினால் என்ன நடக்கும் என்பதை சுலோமோஷன் கேமராவில் படம் எடுக்கிறோம்!


மிஸ்டர் டைகர்! பெட்ரோல் டேங்க் வெடித்தால் என்ன ஆகும் என்பதை இப்போ சோதிக்க போகிறோம். நீங்க அதை இந்த சுவருக்கு பின்னால் இருந்து பாருங்க!
வெரிகுட்! இந்த சோதனை சுவாரசியமா இருக்கும்!


அப்போது திடீர் என்று டைகர் இருந்த இடம் கீழே திறந்து கொள்ள—
பயங்கரவாதிகள் வேலை இது!


இங்கே இருந்து இவன் உயிரோடு தப்பிக்க கூடாது என்பது நமக்கு உத்தரவு!


டைகரின் சட்டை பொத்தான் ஒன்று சிறிய மினி—சமிக்ஞை கருவி!
இவனை இந்த உடையால் பொதிந்து பொம்மை போல் ஆக்கி, கார் சோதனையில் பயன்படுத்தி கொல்வோம்!


பட்டன் ஒலிபரப்பு கருவி மூலம், டைகரை கொல்ல நடக்கும் சதி ஹென்றிக்கு எட்டியது.
இரும்பு தகட்டை முட்டும் சோதனையில் டைகரை போடு!


காரை இரும்பு தகட்டில் மோதும் சோதனை எங்கே நடக்குது?
அது இங்கிருந்து 1 மைல் தூரத்தில்.


பிளீஸ்! என்னை அங்கே கொண்டு விடு! அவசரம்!

அதற்குள் டைகர் இருக்கும் கார் இரும்பு தடுப்பை நெருங்கியது.






டைகர் இருந்த கார் தப்பித்தது.
ஹென்றி! சமயத்தில் நீ செய்த உதவிக்கு நன்றி!
வா! பயங்கரவாதிகளைப் பிடிப்போம்!
பயங்கரவாதிகள் போன கார் வளைந்தது!
நம்ம காருக்கு என்ன ஆச்சு?
வெரிகுட் ஹென்றி! உன் கேமரா நல்லாவே வேலை செய்யுது! உன் கேமரா உதவியால் தான் இவர்களை பிடித்தோம் என்று தலைவர் அறிந்ததும் மகிழ்ச்சி அடைவார்.
அதை நீ சொல்லாதே. நான் சொல்லணும்!
டொட்ட டாங்!
முற்றும்.

உங்கள் கருத்து

## மனித பலூன்!

"மனித பலூ"னில் வந்த கதைகள் எட்டு. அத்தனையும் லட்டு. புதிய ஹீரோ டைகருக்கு ஒரு "ஷொட்டு".

—என். சங்கர், சிங்காரப்பேட்டை.

—டி. ராமநாதன், பெரியகரம், செஞ்சி.

ஜேம்ஸ்பாண்ட் வரவேண்டிய நாளில் வந்து, அவருக்கு தான் இளைத்தவரல்ல என்று நிரூபித்துவிட்டார், டைகர்!

—செ. தமிழ்செல்வி, நாகர்கோவில்–1.

—ஆர். விசாலாட்சி, எலத்தூர், செட்டிபாளையம்.

—வி. மோகனா, தெற்குலேரி.

டைகரின் சாகசங்கள் தொடரட்டும்!

—ஏ. நிஜாமுதீன், காட்டூர், திருச்சி–19.

—கே. கே. அய்யப்பன், பி. எஸ். மார்க்கெட், கோவை–1.

—வே. தியாகராஜன், வேதாரண்யம்.

—பி. சிவபிரகாஷ், பொல்லிக்காளிபாளையம்.

புதிய ஹீரோ டைகரின் வருகை எங்களுக்கு புத்துணர்வு அளிக்கிறது! —கே. துரை அரசன், காஞ்சிக்கோயில்.

—எஸ். பங்காரு, முல்லை நகர், ஆர். ஸ்ரீதர், நெல்லை டவுன்.

"மனித பலூன்!" எங்கள் மனதில் எப்போதும் பறந்து கொண்டிருக்கும்! —கா. லதா, துறையூர்.

—எம். தேவேந்திரன், காந்தி நகர்.

—சி. பூவராகன், படியூர்.

சூப்பர் ஹீரோ டைகருக்கு சூப்பர் ஸ்டார் என்ற பட்டம் கொடுக்கிறேன்! டொட்ட டாங்!

—ஜி. சத்யநாராயணன், திருநீலகுடி.

—கே. என். கோபிநாத் சாய், செங்கல்பட்டு.

—ஏ. வேல்ராஜா, விளாத்திகுளம்.

—ஆர். ஸ்ரீராம், திருவாரூர்–2.

## எஸ்டேட் பேய்! (10-வது அத்தியாயம்)

"முத்தம்மாள் ஏன் விஷம் குடித்தாள்?" என்று அறியத் துடிக்கிறேன்! —கே. ஜமால், எ. புதூர், திருச்சி–12.

—வி. கண்ணபுரம், திருக்கண்ணபுரம்.

"அமாவாசை, பேய்களின் பிறந்த நாள்!" என்ற வாசகம் என் மனதில் நீங்காமல் பதிந்துவிட்டது!

—சி. விஜய், மணவை, ஜி. வேடியப்பன், திருப்போரூர்.

—இ. ஜாகீர் உசேன், மணப்பாறை–6.

விறுவிறுப்பு, மர்மத் தொடர்கதையான எஸ்டேட் பேய், அடுத்த இதழ் எப்போது வரும் என்று ஏங்க வைக்கிறது!

—ரவி, சென்னை–17.

—பி. எல். சேவு, கே. என். புரம், திருப்பூர்–1.

எங்கள் வீட்டில் உள்ள வீடியோ சினிமா, ராணி காமிக்ஸ்!

—பி. செல்வி, நாராயண நகர், சேலம்–15.

# ரூ. 50- பரிசு: கருத்துப் போட்டி-25

"நரபலி" சித்திரக் கதையை படித்துவிட்டீர்கள் அல்லவா? இனி இந்தக் கதையில், உங்கள் மனதைக் கவர்ந்த சம்பவம் எது? அதற்கான காரணம் என்ன? என்று உங்கள் கருத்தை, "ராணி காமிக்ஸ்", ஒரு பக்க அளவுக்கு மிகாமல், எழுதி அனுப்புங்கள்.

மிகச் சிறந்த கருத்துக்கு ரூ. 50 பரிசு வழங்கப்படும்.

தேர்ந்து எடுக்கப்பட்ட கருத்து, 1–12–85 இதழில் பிரசுரிக்கப்படும்.

கருத்துப் போட்டி நிபந்தனைகள்:—

(1) கருத்துக்கள் எங்களுக்கு வந்து சேரவேண்டிய கடைசி தேதி 10–11–85. அதன்பின் வரும் கருத்துக்கள் போட்டிக்கு ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா.

(2) போட்டியில் கலந்து கொள்பவர்களுக்கு வயது வரம்பு கிடையாது.

(3) போட்டியில், ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. சட்டப்படி கட்டுப்படுத்த முடியாது.

(4) கீழே உள்ள பாரத்தை பூர்த்தி செய்து, "கருத்து"டன் சேர்த்து அனுப்ப வேண்டும். அது இல்லாமல் வரும் கருத்துக்கள் ஏற்றுக்கொள்ளப் படமாட்டா.




முகவரி:—
கருத்துப் போட்டி,
"ராணி காமிக்ஸ்",
1091, பெரியார்
நெடுஞ்சாலை,
சென்னை–600 007.

கருத்துப் போட்டி எண்: 25

பெயர்: ..........................................

முகவரி: ..........................................

..........................................

..........................................

..........................................

போட்டி நிபந்தனைகளுக்கு கட்டுப்படுகிறேன்.

..........................................

(கையொப்பம்)

# மூடும் முன்...





"வருமான வரி அலுவலகத்தில் இருந்து நோட்டீசு வந்திருக்கு. அங்கு வேலை பார்க்கும் நம்ப மாப்பிள்ளை தீபாவளிக்கு வருகிறாராம்!"



"சார்! அணுகுண்டு ஒழிப்பு பற்றி பேசணும். தீபாவளிக்கு அணுகுண்டு பட்டாசு தடை பற்றி பேசுறீங்க!"




"தொழிலாளர்களின் போனஸ் கோரிக்கை நியாயமானது! ஆனால் இப்போ அதை நிறைவேற்ற வேண்டாம்! அவர்கள் வேலை நிறுத்தம் செய்ததும் நிறைவேற்றட்டும். அப்போதுதான் முதலாளி நம் திறமையை மெச்சுவார்!"




"தீபாவளி போனஸ் முழுவதையும் சேலை வாங்கி செலவழிப்பவர்களை ஜெயிலில் தள்ள சட்டம் இயற்ற வேண்டும்!"

RANI COMICS
(TAMIL FORTNIGHTLY)
Regd. No. TN/MS(N)/461

# ராணி காமிக்ஸ்

அடுத்த இதழில்...!

மான்சிங் கொள்ளைக் கூட்டத்துடன், இன்ஸ்பெக்டர் ஆசாத் நடத்தும், வீர சாகசம்!



# அழகி வீட்டுக் கொலை!

முழு நீள சித்திரக் கதை!

திகில் கதை மன்னன் **ராம்ஜி** எழுதும், **எஸ்டேட் பேய்!**

துப்பறியும் மர்ம, பேய்த் தொடர்கதை!




ரூ. 50 பரிசு: வாசகர் போட்டி!

படிக்கத் தவறாதீர்கள்!

**15.11.85**-ல் வெளிவருகிறது.

PRINTED AT RANI PRINTERS, MADRAS-7